# ஸ்ரீ மஹாகணேச பஞ்சரத்னம்

**முதா³ கராத்தமோத³க¹ம், ஸதா³ விமுக்தி ஸாத⁴கம்**
**கலாத⁴ராவதம் ஸகம், விலாஸி லோக ரக்ஷகம் |**
**அநாயகைக நாயகம், விநாசி தேப⁴ தை³த்யகம்**
**நதாசுபா⁴சு நாஸகம், நமாமி தம் விநாயகம்** || 1 ||

சந்தோஷத்துடன் கையில் மோதகத்தை (கொழுக்கட்டையை) வைத்துக் கொண்டிருப்பவரும், தம்மைப் பஜிப்பவர்களுக்கு எப்பொழுதும் மோக்ஷத்தைக் கொடுப்பவரும், சந்திர கலையைத் தலையில் தரிப்பவரும், (தம்முடைய சரித்திரத்தைப் பாடிக்கொண்டு) ஆனந்தமாக இருக்கும் பக்தர்களை ரக்ஷிப்பவரும், நாதனில்லாதா ஜனங்களுக்கு ஆபத்துக் காலத்தில் தாமே நாதராக இருந்து காப்பாற்றுபவரும் கஜாஸுரனைக் கொன்றவரும், தம்மை வணங்கும் ஜனங்களுடைய பாவங்களை உடனே நாசம் செய்பவருமான மகாகணபதியை வணங்குகிறேன்.

**நதேதராதி பீ⁴கரம், நவோதி³தார்க்க பா⁴ஸ்வரம்**
**நமத்ஸுராரி நிர்ஜரம், நதாதி⁴காபது³த்³த⁴ரம் |**
**ஸுரேச்வரம் நிதீ⁴ச்வரம் க³ஜேச்வரம் க³ணேச்வரம்**
**மஹேஸ்வரம் தமாஸ்ரயே பராத்பரம் நிரந்தரம்** || 2 ||

தம்மை வணங்காதவர்களுக்கு பயத்தைக் கொடுத்துச் சிக்ஷிப்பவராயும், உதயகாலத்திய சூரியனைப்போல் விளங்குபவராயும், தம்மை வணங்குகிற தேவர்களின் சத்துருக்களான அஸுரர்களை ஒழிக்கிறவராயும், தம்மை நமஸ்கரிப் பவர்களைப் பெரிய ஆபத்திலிருந்து கைதூக்கி விடுபவராயும், தேவர்களைன் அதிபதியாயும், புதையல் சொத்துக்களுக்கு அதிதேவதையாயும் (பக்தர்களுக்குப் புதையல்களைப் கொடுப்பவராயும்), யானைகளுக்கு அதிபதியாயும், சண்டிகேச்வரர் முதலிய பிரதம கணங்களுக்கு நாதராயும், ஈச்வரனுக்கும் மேலானவராயும், உலகுக்கு மூலகாரணமானதால் மேலானது (பரம்) என்று சொல்லப்படும் மாயையைக் காட்டிலும் மேலானவராயும் (மாயா ஸம்பந்தமற்றவராயும்) விளங்கும் மகாகணபதியை இடைவிடாமல் வணங்குகிறேன்.

**ஸமஸ்த லோக சங்கரம், நிரஸ்த தைத்3ய குஞ்ஜரம்**
**த3ரே தரோ த3ரம் வரம், வரேப4 வக்த்ரமக்ஷரம் |**
**க்ருபாகரம் க்ஷமாகரம், முதா3கரம் யசஸ்கரம்**
**மநஸ்கரம் நமஸ்க்ருதாம், நமஸ்கரோமி பா⁴ஸ்வரம்** || 3 ||

பதினான்கு உலகங்களிலுமுள்ள ஜனங்களுக்குச் சுகத்தைக் கொடுப்பவரும், கஜாஸுரனை ஸம்ஹாரம் செய்தவரும், (ஸகல உலகங்களையும் வயிற்றுக்குள் வைத்துக் கொண்டு ரக்ஷிக்கிறவராதலால்) பெருத்த வயிற்றுடன் கூடியவரும்,

சிரேஷ்டரும், உயர்ந்த யானையான ஐராவதத்தின் முகத்தைப் போன்ற முகத்துடன் கூடியவரும், அழிவற்றவரும், தம்மை வணங்குபவர்கள் என்ன அபசாரம் செய்திருந்தாலும் அதைப் பொறுத்துக் கொண்டு அவர்களிடம் கிருபை கொண்டு அவர்களின் மனத்தை நல்வழியில் திருப்பி அவர்களுக்குச் சந்தோஷத்தையும், நல்ல கீர்த்தியையும் உண்டு பண்ணுகிறவருமான ஒளி மிகுந்த மகாகணபதியை வணங்குகிறேன்.

**அகிஞ்சநார்தி மார்ஜநம், சிரந்த நோக்தி பா$^{4}$ஜநம்**
**புராரி பூர்வ நந்த$^{3}$னம், ஸுராரி க$^{3}$ர்வ சர்வணம் |**
**ப்ரபஞ்சநாச பீ$^{4}$ஷணம், த$^{4}$நஞ்சயாதி$^{3}$ பூ$^{4}$ஷணம்**
**கபோலதா$^{3}$ந வாரணம், ப$^{4}$ஜே புராண வாரணம்** || 4 ||

தம்மைப் பூஜிப்பவர்களின் தாரித்திரியப் பீடையை நாசம் செய்கிறவரும், அநாதியான வேத வாக்கியங்களால் துதிக்கப்பெறும் மகிமையுள்ளவரும், சத்துருக்களான அஸுரர்களின் கர்வத்தை அடக்குபவரும், லோகங்களை நாசம் செய்கிற யமனுக்கும் பயத்தைக் கொடுப்பவரும் (தம் பக்தர்களிடம் யமனை அண்டவிடாமல் தடுப்பவரும்), அர்ஜுனன் முதலிய வில்லாளராலும் (காரியாரம்பத்தில்) பூஜிக்கப் பெற்றவரும், கன்னப் பிரதேசத்தில் ஏற்படும் மத ஜலத்தைப் பெருக விடுபவரும், புராதன கஜஸ்வரூபியான மகாகணபதியை வணங்குகிறேன்.

**நிதாந்த காந்தி த$^{3}$ந்தகாந்தம், அந்தகாந்த காத்மஜம்**
**அசிந்த்யரூப மந்தஹீநம், அந்தராய க்ருந்தநம் |**
**ஹ்ருத$^{3}$ந்தரே நிரந்தரம் வஸந்தமேவ யோகிநாம்**
**தமேக த$^{3}$ந்தமேவ தம், விசிந்தயாமி ஸந்ததம்** || 5 ||

மிகவும் அழகான தந்தத்தின் சோபையுடன் கூடியவரும், யமனுக்கும் யமனான பரமேச்வரனுடைய புத்திரரும், மனத்தாலும் சிந்திக்க முடியாத ஸ்வரூபத்தை யுடையவரும், நாசமற்றவரும், விக்கினங்களை நாசம் செய்கிறவரும், யோகிகளின் ஹ்ருதயத்தில் எப்பொழுதும் வசிப்பவரும், ஒரே தந்தத்துடன் கூடியவருமான மகாகணபதி ஒருவரையே எப்போதும் தியானிக்கிறேன். (வியாஸாசார்யா சொன்ன மகாபாரதத்தை எழுதுவதற்காக விநாயகர் ஒரு தந்தத்தை ஒடித்து எழுது கோலாக உபயோகித்தார் என்பது புராண வரலாறு.)

## பல ஸ்ருதி:

**மஹா க$^{3}$ணேச பஞ்சரத்நம் ஆத$^{3}$ரேண யோநவஹம்**
**ப்ரஜல்பதி ப்ரபா$^{4}$தகே ஹ்ரிதி$^{3}$ ஸ்மரந் க$^{3}$ணேச்வரம் |**
**அரோக$^{3}$தாம் அதோ$^{3}$ஷதாம் ஸுஸாஹிதீம் ஸுபுத்ரதாம்**
**ஸமாஹிதாயுர்ஷ்ட பூ$^{4}$திம்ப்$^{4}$யுபைதி ஸோசிராத் ||**

## ஸ்ரீ மஹாகணேச பஞ்சரத்னம்

"மகாகணபதி பஞ்சரத்னம்" என்னும் இந்த ஸ்தோத்திரத்தை எவர் ஒவ்வொரு நாளும் விடியற்காலையில் மகாகணபதியை இதயத்தில் தியானித்துக் கொண்டு பாராயணம் செய்கிறார்களோ அவர்கள் சீக்கிரமாகவே எல்லா ரோகங்களிலிருந்தும், எல்லா தோஷங்களிலிருந்தும் விடுபடுகிறார்கள். அவர்கள் நல்ல கவிதா சக்தியையும், உத்தம புத்திரர்களையும், நீண்ட ஆயுளையும், அஷ்டைசுவரியங்களையும் அடைவார்கள்.

**(ஜெய கணேச, ஜெய கணேச, ஜெய கணேச பாஹிமாம்!**
**ஜெய கணேச, ஜெய கணேச, ஜெய கணேச ரக்ஷமாம்!)**

**|| இதி ஸ்ரீ சங்கராசார்ய விரசிதம் ஸ்ரீ மஹாகணேச பஞ்சரத்னம் சம்பூர்ணம் ||**

---

